POST WITHOUT PRE-PAYMENT LICENCE NO. G 6-TN-MS C. P. P. 55

ANNA Leading Progressive Tamil Daily of the People

# இந்திராவுக்கு புரட்சித்தலைவர்

Regd. No. TN-MS (C) 422 Phone: 420212 4 பக்கம் விலை 60 காசு

அண்ணா

நிறுவனர்: எம்.ஜி.ஆர்

[மலர் 10] சென்னை 31-10-1985 வியாழன் வெளியூர் 1-11-1985 வெள்ளி [இதழ் 15]

# அஞ்சலி

## அதிகாலையிலே சென்று மலர் தூவி வணங்கினார்

புதுடெல்லி, அக். 31- அன்னை இந்திராகாந்தியின் சமாதிக்கு அதிகாலை 4.25 மணிக்கு சென்று முதல்வர் புரட்சித்தலைவர் மலர் வளையம் வைத்து அஞ்சலி செலுத்தினார்.

அன்னை இந்திரா சுடப்பட்ட இடத்திற்குச் சென்று அந்த இடத்தில் மலர் தூவி அங்கும் புரட்சித்தலைவர் அஞ்சலி செலுத்தினார்.

சப்தர்ஜங்சாலையில் உள்ள அன்னை இந்திரா அறக்கட்டளை இல்லத்திற்குச்சென்று அங்கு நடந்த வழிபாட்டு கூட்டத்திலும் புரட்சித்தலைவா கலந்துகொண்டார்.

அன்னை இந்திரா சென்ற ஆண்டு இதே நாளில்தான் அமரரானார். டெல்லியில் அன்னை இந்திரா சமாதிக்குச் சென்று முதன்முதலாக அஞ்சலி செலுத்தியவர் புரட்சித்தலைவர் தான்.

அன்னை இந்திரா காந்திக்கு அஞ்சலி செலுத்த முதல்வா புரட்சித்தலைவர் டெல்லி சாணக்கியபுரியில் உள்ள தமிழ்நாடு இல்லத்திலிருந்து அதிகாலை 3 50 மணிக்குப் புறப்பட்டுச் சென்றார்.

அவருடன் அவருடைய துணைவியார் ஜானகி அம்மையார், நாடாளுமன்ற துணை சபாநாயகர் தம்பித்துரை பாராளுமன்ற கழக அணித் தலைவர்மோகனரங்கம் ஆகியோரும சென்றனர்.

பழைய டெல்லிக்குச் செல்லும சாலையில் சாந்திவனத்தில் அன்னை இந்திரா சமாதி வாயிலுக்கு அதிகாலை 4-20 மணிக்கு முதல்வர் புரட்சிததலைவர் சென்றார்.

சாலையில் காரை நிறுத்தி விட்டு அவர் வெகு தூரம் நடந்தே சென்றார் அன்னை இந்திரா சமாதியில் மலர் வளையம் வைத்து மவுனமாக நின்று புரட்சித்தலைவர் அஞ்சலி செலுத்தினார்.

அதிகாலையில் அன்னை இந்திரா காந்திக்கு முதன் முதலாக அஞ்சலி செலுத்தியவர் புரட்சித்தலைவர்

## அஞ்சலி கூட்டம்: புரட்சித் தலைவர் பங்கேற்பு

அன்னை இந்திராவுக்கு அஞ்சலி செலுத்திட டெல்லி போட்கிளப் மைதானத்தில் பிரமாண்டமான பொதுக் கூட்டம் நடைபெற்றது.

பிரதமர் ராஜீவ்காந்தி தமிழகமுதல்வர் புரட்சித்தலைவர் உட்படலட்சோப லட்சம் மக்கள் பங்கேற்றனா பிற மாநில முதல்வர்களும் கலந்துகொண்டனர்

பொதுக்கூட்டம் நடைபெற்றஇடத்தில் அன்னை இந்திராவின் 80 அடி உயர படம் (கட்-அவுட்) வைக்கப்பட்டிருக்கிறது பொதுமக்களின் பார்வைக்கு இந்தப்படம் தொடர்ந்து வைக்கப்பட்டிருக்கும் தான்.

அதன் பின்னர் தான் மற்ற பிரமுகர்கள் அஞ்சலி செலுத்த வந்தனர்.

தமிழக அரசின் சிறப்பு பிரதிநிதி எட்மண்ட், நாடாளுமன்ற உறுப்பினர்கள் ஏ.சி.சண்முகம் ஜெகத்ரட்சகன் கடம்பூர் ஜனார்த்தனம் ஆகியோரும் புரட்சித்தலைவருடன் சென்றுஅன்னைஇந்திராவுக்கு அஞ்சலி செலுத்தினர்

### சுடப்பட்ட இடத்தில்

பின்னர் அன்னை இந்திரா சுடப்பட்டஇடத்திற்கு முதல்வர் புரட்சித் தலைவர் சென்றார்

இந்த மண்ணுக்காக இந்த நாட்டின் மக்களுக்காக அன்னை இந்திரா ரத்தம் சிந்திய இடம்

2 ம் பக்கம் பார்க்க

இந்திரா நினைவு நாள் கூட்டத்தில் கலந்து கொள்ள டெல்லி சென்றுள்ள முதல்வர் புரட்சித்தலைவர், கர்நாடக முதல்வர் ஹெக்டே, ஆந்திர முதல்வர் என, டி. ராமராவ் ஆகியோர் சந்தித்த போது எடுத்தபடம்.

## ''தனித்தனி குழுக்கள் அமைப்பீர்''

# நதிநீர் பிரச்சினை தீர புரட்சித்தலைவர் கருத்து

புதுடெல்லி. அக், 31— பல மாநிலங்களில் பாயும் ஒவ்வொரு நதிநீரையும் சீராகப் பங்கிட தனித் தனி குழு அமைக்க வேண்டும் என்று முதல்வர் புரட்சித்தலைவர் யோசனை தெரிவித்தார்.

தேசிய நீர் ஆதார கவுன்சில் முதல் கூட்டம் டெல்லியில் நடந்தது. பிரதமர் ராஜீவ்காந்தி முதல்வர் புரட்சித் தலைவர் உட்பட மாநில முதல்வர்கள் நீர்ப்பாசனத் துறை அமைச்சர்கள் ஆகியோர் இதில்கலந்து கொண்டனர்.

ஒன்றுக்கு மேற்பட்ட மாநிலங்களில் பாயும் எல்லா நதிகளையும் 'தேசிய நதிகளாக அறிவிக்க வேண்டும் என்று இக்கூட்டத்தில் முதல்வர் புரட்சித் தலைவர் கருத்து தெரிவித்தார்.

இந்தியாவைப் பொறுத்த வரை பெரிய நதிகள்பலவும் ஒன்றுக்கு மேற்பட்ட மாநிலங்களில் பாய்கிறது அந்த நீரை முறையாக சம்பந்தப்பட்ட மாநிலங்கள் அதிகபட்சம் பயன்படுத்த அவற்றை தேசிய நதிகளாக அறிவிப்பது சிறந்ததாகும் என்று புரட்சித்தலைவர் குறிப்பிட்டார்.

நதிநீர்பிரச்சினை தீர பல மாநிலங்களில் பாயும் ஒவ்வொரு நதிக்கும், நிலையான நடுநீர்குழு அல்லது வாரியம் அமைக்கலாம் என்ற கருத்தை முதல்வர்ஏற்றார்.

ஆனால் நீர் நிலை அனைத்துக்கும் நாடு முழுவிய அளவில் மத்திய அரசு மேற்பார்வையில் ஓர் அமைப்பு இருக்கலாம் என்ற யோசனையை புரட்சித் தலைவர் ஏற்கவில்லை

இப்பணிக்காக மாநிலங்கள் பலவற்றிலும் தகுந்த அமைப்புகளும் வசதிகளும் உள்ளன, எனவே இதற்காக மறுபடி ஓர் அமைப்பு தேவையில்லை மாறாக மாநிலங்கள் அளவிலான அமைப்புகளை நவீனப்படுத்தி வலுப்படுத்த வேண்டும் என்று புரட்சித்தலைவர் குறிப்பிட்டார்.

### பிரதமர் பேச்சு

பிரதமர் ராஜீவ் பேசுகையில் கூறியதாவது:

நமது பிரச்சினைகள் அனைத்தும் நீரைச்சுற்றியே அமைந்துள்ளதாகதோன்றுகிறது. பருவக் காற்று சாதகமாக உள்ளதா என்று நாம் முதலில் எண்ணுகிறோம். அதற்காக காத்திருக்கையில் சில இடங்களில் வறட்சியும் ஏற்படுகிறது. வெள்ளப் பெருக்கெடுப்பு மிகக் குறைவாகவும் மிகவும் அதிகமாகவும் இருப்பதை நாம் கண்டுள்ளோம்

பாசன முறைகள் சரியாக அமைந்திருந்த போதிலும் நீர் தேங்குவதால் உவர்நிலம் ஏற்பட்டு பிரச்சினைகள் உண்டாவது உண்டு. நாம் பெருமுயற்சிகளை மேற்கொண்டு வருகிறோம். அதில் ஒரு வளத்தை நம்மால் முழுமையாகப் பயன்படுத்த முடியவில்லை, அதுதான் நீர்வளம்.

நீரைச் சிறந்தமுறையில் பயன்படுத்திக்கொள்ள நம்மிடையே ஒத்துழைப்பு ஏற்படுத்திக் கொள்ளக்கூட நம்மால் முடியவில்லை. அதற்கானகொள்கை ஒன்று வகுக்கப்படவில்லை நீரைப் பயன்படுத்திக்கொள்ள பெரிய திட்டம் ஒன்று வடிவமைக்கப்படவில்லை நமது மாநிலங்கள் அவற்றிடையே ஓடும் ஆறுகள் குறித்து மிகப் பெரிய பிரச்சினைகளை இன்னமும் தீர்த்துக கொள்ளாமல் வைத்திருக்கின்றன.

நாம் 40சதவீத நீரை மட்டுமே பயன்படுத்திக் கொண்டுள்ளோம். நமக்கு கிடைக்கிருக்கும் நீர்வளம் அனைத்தையும் நாம் பயன்படுத்திக் கொள்வதற்கான திறனைப் பெற வேண்டும். நீர்வீணாகாதவாறு பார்த்துக் கொள்ள வேண்டும். பல மாநிலங்களில் மிகுதியான நீர் பாசனத்திற்கு பயன்படாமல் வீணாவதை நான் பார்க்கிறேன்.

இவ்வாறு பிரதமர் குறிப்பிட்டார்,

### சங்கரானந்த்

''நீர்வளத்தைப் பாதுகாத்து அதை திறம்பட நிர்வகிப்பது தேசிய முக்கியத்துவம் வாய்ந்த ஒன்றாகும். தேசிய நீர்வளத் திட்டங்களை தயாரிக்க மாநிலங்களின் நிபந்தனையற்ற ஒத்துழைப்பு தேவை'' என்றார மத்திய நீர்வள அமைச்சர் திரு பி.சங்கரானந்த்.

# இந்திரா நினைவு நாள்: மவுன ஊர்வலம் சர்வமத பிரார்த்தனை

## காங்கிரஸ் கட்சிசார்பில் நிகழ்ச்சிகள்

சென்னை, அக். 31— இந்திரா காந்தியின் நினைவு நாளையொட்டி காங்கிரஸ் கட்சி சார்பில் இன்று மாலை மவுன ஊர்வலம் நடைபெறுகிறது.

காமராஜர் சிலையில் இருந்து இந்த மவுன ஊர்வலம்புறப்படுகிறது.

தமிழ்நாடு காங்கிரஸ் தலைவர் பழனியாண்டி தலைமையில் செல்லும் ஊர்வலம் காமராஜர் திடலை அடையும்.

அங்கு நினைவு நாள் பொதுக் கூட்டம் பழனியாண்டி தலைமையில் நடைபெறுகிறது.

இந்தக்கூட்டத்தில் சிவாஜி கணேசன், எம். பி. சுப்பிரமணியம் டி. யசோதா எம்.எல்.ஏ, எஸ்.கே.டி. ராமச்சந்திரன், ஏ.ஆர். மாரிமுத்து. ஹாஜா ஷெரிப், செங்கல்வராயன், டாக்டர் சவுரிராஜன் மற்றும்பலர் பேசுகின்றனர்.

காமராஜர் திடலில் பிரார்த்தனை கீதம் நடைபெற்றது. மாதர்சங்கம் சார்பிலும் பிரார்த்தனை நடைபெற்றது.

சர்வமத வழிபாடும் இன்று காமராஜர் திடலில் நடைபெற்றது.

அவ்வை சண்முகம் சாலையில் உள்ள காதிபவனில் காலைமுதல் இரவு வரை பிரார்த்தனை நடைபெறுகிறது.

### அரசு சார்பில்

தமிழக அரசு சார்பில் இந்திரா நினைவுநாள் கூட்டம் கலைவாணர் அரங்கில் இன்று மாலை நடைபெறுகிறது.

ஆளுநர் குரானா நிதி அமைச்சர் டாக்டர்நாவலர் மற்றும் பலர் பேசுகின்றனர்

### ரத்ததானம

சென்னை தனம் பேட்டை காமராஜர் திடலில் 74 வது வட்ட மகளிர் காங்கிரசார் 75 பேர் கனபாக்கியம் தலைமையில் இந்திரா அம்மையார் நினைவு நாளையொட்டி ரத்த தானம் செய்தனர்.

74 வது வட்டத்தில் கிருஷ்ணன், கனபாக்கியம், பாலன், துரை ஆகியோர் முன்னிலையில் 2 000 பேருக்கு உணவு வழங்கப்பட்டது.

தமிழகம் முழுவதிலும் பல்வேறு இடங்களில் அன்னை இந்திராவுக்கு அஞ்சலி செலுத்தப்பட்டது. மதுரையில் 65 வார்டுகளிலும் இந்திரா படம் அலங்கரித்து வைக்கப்பட்டு அஞ்சலி செலுத்தப்பட்டது

மதுரையில் ஆயிரம் சிறைக் கைதிகளுக்கு அன்னதானம் வழங்கப்பட்டது. விசேஷ பிரார்த்தனையும் நடைபெற்றது.

### சிவில் சப்ளை ஊழியர்கள் உறுதிமொழி

தமிழ்நாடு சிவில்சப்ளைஸ் கார்ப்பரேஷன் சென்னை மண்டலத்தில் பணியாற்றுகின்ற ஊழியர்கள் அனைவரும் ஒட்டு மொத்தமாக மறைந்த பாரத பிரதமர் அன்னை இந்திரா அவர்களின் முதல் நினைவு நாளான இன்று இந்திரா அவர்களின் வழியில் இந்திய தேசிய ஒருமைப்பாட்டை காக்க இந்தியர்களாகிய நாம் இந்நாட்டின் முன்னேற்றத்திற்காகவும், இந்தியமக்களின்ஒற்றுமைக்காகவும் பாடுபடுவோம் என்று உறுதிமொழி எடுத்தனர்.

## குண்டு துளைக்காத கார்-பாதுகாப்பு எதுவும் வேண்டாம்

# ஆறு மைல் நடந்தே சென்று அன்னைக்கு ராஜீவ் அஞ்சலி

புதுடெல்லி. அக் 31- பலத்த பாதுகாப்பு ஏற்பாடுகளையும், குண்டு துளைக்காத காரையும் உதறித் தள்ளிவிட்டு பிரதமர் ராஜீவ்காந்தி எட்டு கிலோ மீட்டர் தூரம் ஒன்றரை மணி நேரம் நடந்தே சென்று அன்னை இந்திராவுக்கு அஞ்சலி செலுத்தினார்.

பாராளுமன்ற காங்கிரஸ் உறுப்பினர்கள் புது டெல்லியில் உள்ள காங்கிரஸ் தலைமை அலுவலகத்திலிருந்துமவுனப் பேரணியாக இந்திரா சமாதி நோக்கிப் புறப்பட்டனர். அவர்களுடன் பல்லாயிரக்கணக்கான காங்கிரஸ் தொண்டர்களும் அன்னை இந்திரா சமாதிக்கு பாதயாத்திரையாகச சென்று அஞ்சலி செலுத்தினர். அவர்களுக்கு தலைமை ஏற்று பிரதமா ராஜீவ் காந்தி நடந்தே சென்றார் அண்ணல் காந்தியடிகள் ஜவகர்லால் நேரு சமாதிகளுக்குநடுவே அன்னை இந்திரா காந்தியின் சமாதி இருக்கிறது

அந்த சமாதியில் பிரதமர் ராஜீவ் ஒரு மணிநேரம் இருந்து மலர்வளையம் வைத்து அஞ்சலி செலுத்தினார். ராஜீவ்காந்தி இப்படி நடந்தே வருவார் என்று எவரும் எதிர்பார்க்கவில்லை. அன்னை இந்திராகாந்தி மீதுஅவா எவ்வளவு அன்பு கொண்டிருக்கிறார் என்பதனை இந்த நிகழ்ச்சி எடுத்துக் காட்டுவதாக இருந்தது

அன்னை இந்திராகாந்திக்கு அஞ்சலி செலுத்த நாடுமுழுமையும் இருந்து லட்சக்கணக்கான மக்கள் டெல்லிக்கு வந்து இருக்கிறார்கள்;

எனவே பலத்த பாதுகாப்பு ஏற்பாடுகள் செய்யப்பட்டுள்ளன.

### ஜைல்சிங் அஞ்சலி

காலை 6.30 மணிக்கு குடியரசுத் தலைவர் ஜைல்சிங் அன்னை இந்திராசமாதிக்கு வந்து மலர் வளையம் வைத்து அஞ்சலி செலுத்தினார்.

ராஜீவ் காந்தியுடன் அவருடைய துணைவியார் சோனியாகாந்தியும் புதல்வன் ராகுல்காந்தியும் வந்திருந்தனர்

# இந்திரா உருவத்துடன் ஐந்து ரூபாய் நாணயம்

ஐதராபாத், அக், 31— முதன் முதலாக இந்தியா முழுவதும் 5 ரூபாய் நாணயம் வெளியிட திட்டமிடப்பட்டுள்ளது. இது இந்திரா பிறந்த தினமான நவம்பர் 19ல் எல்லா இடங்களுக்கும் பரவலாக அறிமுகப்படுத்தப்பட இருக்கிறது.

அன்னை இந்திராவின் அளவிட முடியாத தேசபக்திக்கும், ஒருமைப்பாட்டின் மேல்வைத்திருந்த நம்பிக்கைக்கும் காணிக்கையாகும் விதத்தில் அவரது உருவத்துடன் இந்த நாணயம் உருவாக்கப்பட்டுள்ளது

இது சம்பந்தமான அதிகாரபூர்வ அரசு தகவல்கள் விரைவில் பம்பாய், கல்கத்தா, ஐதராபாத் சென்னை போன்ற முக்கிய நகரங்களில் வெளியாகும்.

இந்தப் புதியஐந்து ரூபாய் நாணயம், ஒரு ரூபாய் நாணயத்தைவிட, அளவில் பெரியதாகவும், கனமாகவும் இருக்கும்.




**அறிவு-அனுபவம்**

புத்தகங்கள்வளர்த்து விடும் அறிவைவிடஅனுபவங்கள் வளர்த்து விடும்அறிவே நிலைத்து நிற்கும்.

—பேரறிஞர் அண்ணா

**அன்பு-அதிகாரம்**

அதிகாரத்தால் ஒரு மனிதனை அடக்கி ஆள்வதைவிட அன்பினால் அடக்கிஆள்வதே சிறந்தது.

—தந்தை பெரியார்

## மாநகராட்சி புதிய கட்டிடத் திறப்பு விழா

சென்னை. அக். 31- சென்னை மாநகராட்சியின் 34—வது வட்டத்திற்காக அயினாவரம் யுனைடெட் இந்தியா காலனியில் புதிதாக கட்டப்பட்டுள்ள அலுவலக கட்டிடத் திறப்புவிழா நாளை நவம்பர் 1-ந்தேதி மாலை மாநகராட்சி தனி அதிகாரி மாதவசர்மா தலைமையில் நடைபெறுகிறது.

இவ்விழாவில் அமைச்சர் ப. உ. ச கலந்து கொண்டு புதிய கட்டிடத்தை திறந்து வைக்கிறார் கலாநிதி எம்.பி மாநகராட்சி ஆணையர் சாந்தஷீலா நாயர் மற்றும் பலர் கலந்து கொள்கின்றனர்.

# இந்திரா ஒரு தீர்க்கதரிசி!

படுபாவிகளால் சுட்டுக் கொல்லப்பட்ட இந்தியப் பிரதமர் அன்னை இந்திராகாந்தி அம்மையார் அவர்களின் நினைவு நாள் இன்று. பண்டித ஜவஹர்லால் நேருவின் திருமகளாகப் பிறந்து காங்கிரஸ் கட்சியின் தலைவியாக உயர்ந்து, லால்பகதூர் சாஸ்திரி அமைச்சரவையில் செய்தி மற்றும் ஒலிபரப்புத்துறையின் அமைச்சராக முதலில் பணியாற்றினார், பெருந்தலைவர் காமராஜரால் இந்தியப் பிரதமராக உருவாக்கப்பட்ட வரலாற்றுக்கு சொந்தக்காரர் அவர்.

இந்தியா சுதந்திரம் அடைந்து 38 ஆண்டுகள் ஆகிறது. இந்த 38 ஆண்டு காலத்தில் ஏறக்குறைய 15 ஆண்டுகால சரித்திரத்தை அவரது பொற்கரங்கள் தான் எழுதின.

### அதிசயிக்கும் நினைவாற்றல்

இந்த அம்மையாரின் துணிச்சலை நான் பல முறைகண்டு அதிசயித்து இருக்கிறேன். அவர்கள் ஒலிபரப்புத்துறை அமைச்சராக இருந்தபோதே நான் அவர்களை நன்கு அறிவேன். எல்லோரிடமும் சாதாரணமாக பழகுகின்ற தன்மையும், அனைவரையும் நினைவிலே வைத்துக் கொள்ளக்கூடிய ஆற்றலும் அந்த அம்மையாரிடம் அற்புதமாக இருந்தன.

பாரதப் பிரதமராகத் தேர்ந்தெடுக்கப்பட்ட பிறகு மூத்ததலைவர்கள் அனைவரையும் அரவணைத்து அரசோச்சிய காலகட்டத்தில் நான் நாடாளுமன்ற உறுப்பினராகப் பணியாற்றும் வாய்ப்பினைப் பெற்றிருந்தேன். தீர்க்க தரிசனத்தோடு பல நல்ல காரியங்களை மிகத்துணிச்சலாக செய்து முடித்தவர் அவர். அவரிடத்தில் நட்புக்கு என்றைக்கும் இடமுண்டு. தாய்ப் பாசத்தோடு பழகுவதிலும் அவருக்கு நிகர் அவர் தான், என்று சொன்னால் மிகையாகாது.

யாராவது அவரைப் பார்க்க வேண்டும் என்று சொன்னால் எப்படியாவது அவரைப் பார்த்துப்பேசி பரிகாரங்களைப் பெற்று வருதுவிட முடியும். நேரத்தை எப்படித்தான் ஒதுக்குவார்களோ எனக்குத் தெரியாது. அந்த அளவுக்கு நேரத்தை ஒதுக்கிபல்வேறு மாநில மக்களோடு தொடர்பு கொள்வதில் ஒரு தனிப்பட்ட ஆற்றலை அவர் வளர்த்து வந்திருக்கிறார்,

இந்திரா அம்மையார் பல நல்ல திட்டங்களை நாட்டுக்கு நல்கினார்கள். ரூபாய் மதிப்பை குறைக்க வேண்டும் என்று கருதிய நோக்கத்திலும் பலபேருடைய எதிர்ப்பு இருந்தும்துணிச்சலாக முடிவு எடுத்து அன்றைக்கு இருந்த இந்தியப் பொருளாதார சூழ்நிலையை நிலைநிறுத்தி இந்தியா வளர வழி காட்டியவர் அவர்.

காங்கிரஸ் கட்சி இரண்டாகப் பிரிந்த பிறகு மேலும் பல நல்ல திட்டங்களை தனக்குக் குறைந்த பெரும்பான்மைதான் பாராளுமன்றத்தில் இருக்கிறது என்பதைப்பற்றிக் கூட கவலைப்படாமல் எங்களைப் போன்றஎதிர்க்கட்சிகளின் ஆதரவோடு மிகப் பெரிய சீர்திருத்தத் திட்டங்களான வங்கிகளை தேசியமயமாக்குவது, மன்னர் மானிய ஒழிப்பு ஆகிய இரண்டையும் நிறைவேற்றிக் காட்டினார்கள். இன்றைக்கு தேசியமயமாக்கப்பட்ட வங்கிகள் சுமார் 750 ஆயிரம் கோடி ரூபாய் வைப்புத் தொகையாக வைத்திருக்கிறது. நகரங்கள் மட்டுமல்லாமல் கிராமங்கள், பட்டிதொட்டிகள் எங்கும் வங்கிகளின் ஆயிரக்கணக்கான கிளைகள் தொடங்கப்பட்டுள்ளன. ஆயிரக்கணக்கானபடித்த



பட்டம்பெற்ற இளைஞர்கள் அந்த வங்கிகளிலே வேலைபெற்று பணியாற்றுகின்றசிறப்பினைக்காணும் போதெல்லாம் அந்த அம்மையாரின் தீர்க்கதரிசனத்தை நான் எண்ணாமல் இருந்தது கிடையாது.

### பொருளாதார வளர்ச்சி

அன்றைக்கு இந்திரா அம்மையார் துணிச்சலாக வங்கிகளை தேசியமயமாக்காமல் இருந்திருப்பார்களேயானால் இவ்வளவு பெரிய பொருளாதார வளர்ச்சியை நாடு பெற்றிருக்குமா என்பதே சந்தேகம். தேசியமயமாக்கப்பட்ட 14 வங்கிகளை இந்தியாவிலிருந்த 75 குடும்பங்கள் கையில் வைத்துக்கொண்டு தங்கள் குடும்பங்களை மட்டும் தொழில் துறையில் வளர்த்துக்கொண்டிருந்த அந்தக் காலகட்டத்தை நான் எண்ணிப்பார்க்கிறேன்

இன்றைக்கு சாதாரண, பாமர மக்களான காய்கறி வியாபாரிகள் கூட வங்கிகளுக்குள் நுழைத்து வெளியே வருகிற காட்சியை கண்டுமிக்கமகிழ்ச்சி அடைகிறேன். இதற்கு கிளம்பிய எதிர்ப்பினை அந்த அம்மையார் துணிச்சலாக சமாளித்தார்கள். அரசே கவிழ்ந்துவிடுமோ என்ற ஐயப்பாடு அனைவர் உள்ளத்திலும் எழுந்தது. அதைப பற்றியெல்லாம் அந்தஅம்மையார கவலைப்படவேயில்லை

அதற்கு மேலாக மன்னர் மானிய ஒழிப்பைகொண்டு வந்தார்கள் அது இதைவிட பயங்கரமான மசோதாவாகும். நடாளுமன்றத்தில் அதை நிறைவேற்றுவதற்குள் அந்த அம்மையார் எடுத்துக கொண்ட சிரமங்களை நான் நன்றாக அறிவேன், அப்போதிருந்த பாராளுமன்ற விவகார அமைச்சர் திரு. ரகுராமையா அவர்கள் எனது நண்பர்.

நானும அவரும் அம்மையாரை பலமுறை இதற்காக சந்திப்பது வழக்கம். கொஞ்சம்கூட அச்சமின்றி அவர்கள் அற்புதமாக பணியாற்றினார்கள், அந்த மசோதா மக்கள் சபையில் நிறைவேற்றப்பட்டு, மாநிலங்களவையில் ஒரு ஓட்டு வித்தியாசத்தில் தோல்வியடைந்தவுடன் மக்கள் சபையேயை கலைத்து விட்டு பொது மக்களிடத்தில்வாக்கு கேட்க உடனடியாக முடிவெடுத்தா

அதேபோலபொதுமக்கள் மத்தியிலும் வந்து வாக்கு கேட்டு, மூத்ததலைவர்களையெல்லாம் எதிர்த்து துணிவோடு தனியான செல்வாக்கு மூலம் மக்கள் சபைக்கு பெரும்பான்மை பெற்றார்கள். அந்த ஆட்சியிலும் பெரும்பான்மை பெற்றுவிட்டோம் என்று இறுமாந்து இருந்துவிடாமல்நாட்டுக்கு நல்லது செய்தேயாக வேண்டும்குறிப்பாக கொத்தடிமைமுறையைநாட்டை விட்டே அகற்றவேண்டும்; கிராமங்கள் கவனிக்கப்படவேண்டும்; என்பன போன்ற பல நல்ல திட்டங்கள் அடங்கிய 20 அம்ச திட்டத்தினை நாடே போற்றும் வகையில் வெளியிட்டார்கள். அதை இன்றைக்கும் பாரதப் பிரதமர் திரு. ராஜீவ்காந்தி அவர்கள் நடைமுறைப்படுத்தி வருவது பாராட்டுக்குரிய ஒன்று 20 அம்சத திட்டம் அறிவிக்கப்பட்ட பிறகு இந்திய முழுவதும் பல முன்னேற்றங்கள் ஏற்பட்டுகொண்டு வருவதை நாடு கண்டு வருகிறது

### நன்றிக்கடன்

இந்தியா முழுவதிலும் உள்ள மக்கள் இந்திரா அம்மையாருக்கு இதற்காக என்றெனறைக்கும் நன்றிக்கடன் பட்டிருக்கிறார்கள்.

பேரறிஞர் அண்ணா அவர்களிடத்தில் இந்திரா அம்மையார் பற்றும், பாசமும் கொண்டிருந்தார்.

அறிஞர் அண்ணாவின் மறைவுக்காக இந்திரா அம்மையார் மிக்க வருந்தியதோடு அவரது இரங்கல் கூட்டத்திலும் கலந்து கொண்டு தனது அஞ்சலியைச் செலுத்தினார்கள், புரட்சித்தலைவரிடம் அவர் மட்டற்ற மதிப்பு வைத்திருந்ததை நான்பலநேரங்களில் கண்டிருக்கிறேன்.

### அரும்பணி தொடருவோம்

பாரதப் பிரதமராக இருந்தபோதும், பிரதமர் பதவி இல்லாதிருந்த போதும் மீண்டும் பாரதப் பிரதமராக பணியேற்ற போதும் நான்அவரிடத்தில் அடிக்கடி பழகியிருக்கிறேன் எந்த நேரத்திலும் அவர் ஒரே மாதிரியான தன்மையோடு பழகி வந்தார்கள் என்பதை நான் சொல்லியேத் தீரவேண்டும்.

மதுரையில் நடைபெற்ற உலகத்தமிழ் மாநாட்டிற்கு புரட்சித்தலைவர் அவர்களை அழைத்தபோது ஓடோடி வந்து அந்த மாநாட்டு ஊர்வலத்திலும் மாநாட்டிலும் கலந்து கொண்டு தமிழின் பெருமையை எடுத்துச் சொல்லியதை தமிழகம் என்றைக்கும் மறக்காது.

அன்னை இந்திராகாந்தி செய்ய விரும்பிய அரும் பணிகளைத் தொடர்ந்து செய்வது தான் நாம்அவருக்குசெலுத்தும் அஞ்சலியாகும்.

வாழ்க அன்னைஇந்திராவின் புகழ்!

-:க. இராசாராம்:-
தொழில் துறை அமைச்சர்

# புரட்சித்தலைவர் நடத்திவைக்கும் கழக எம். எல். ஏ. திருமணம்

சென்னை, அக். 31— காங்கேயம் தொகுதிகழக சட்டமன்ற உறுப்பினர் கே. சி. பழனிசாமிக்கும் திருப்பூர் சி.கே, பழனிசாமியின் மகள் சவுந்தர்க்கும் வரும் 4ந்தேதிகாலை 9-15 மணிக்கு முதல்வர் புரட்சித் தலைவர் திருமணத்தை நடத்தி வைக்கிறார்.

சென்னை வடபழனியில் உள்ள 'விஜய சேஷமகாலில்' நடைபெறும் இத் திருமணத்தில் அமைச்சர் முத்துசாமி வரவேற்புரையாற்றுகிறார்.

நிதியமைச்சர் டாக்டர் நாவலர், அமைச்சர்கள்பண்ருட்டி ராமச்சந்திரன் கே.ஏ.கே. ஆர்.எம்.வீ. ராசாராம். ப. உ. ச. மற்றும் அமைச்சர் பெருமக்கள், கழக செயலாளர்கள் கலந்துகொண்டு வாழ்த்துரை வழங்குகின்றனர்.

# 106 சிறிய நீர் மின் நிலையம் அமைக்க யோசனை

சென்னை, அக். 31— தமிழ்நாட்டில் உள்ளஆறுகளில் 106 சிறிய மின்சார உற்பத்தி நிலையங்களை தனியார் துறை மூலம் அமைக்கலாம் என்று யோசனை தெரிவிக்கப்பட்டுள்ளது,

மாநில தொழில் ஆலோசனைக் கூட்டம் நேற்று கோட்டையில் நடந்தது. இந்தக் குழுவின் தலைவர் அமைச்சர் ராசாராம் தலைமை வகித்தார்.

தொழில்துறை செயலாளர் செல்வராஜ் மற்றும் பல்வேறு தொழில் அமைப்பு பிரிவுகளின் தலைவர்கள் அதிகாரிகள் தொழில் அதிபர்கள் இந்தக் கூட்டத்தில் கலந்து கொண்டார்கள்.

கூட்ட முடிவில் தொழில் துறை செயலாளர் செல்வராஜ் நிருபர்களிடம் கூறியதாவது:-

### 38 விஷயங்கள்

நான்காவது ஆலோசனை கூட்டம் நடந்தது.

இதில் 38 விஷயங்கள் பற்றி விவாதிக்கப்பட்டது. முக்கியமாக மின் உற்பத்தி. மின்சாரத் தேவை பற்றி விவாதிக்கப்பட்டது.

நதிகளில் இருந்து மின்சாரம் தயாரிக்க 106இடங்கள் தேர்ந்தெடுக்கப்பட்டுள்ளது இவைகளில் சிறுரக மின் உற்பத்தி நிலையங்களை தனியார் மூலம் அமைக்கலாம் என்று யோசனை தெரிவிக்கப்பட்டது

### 42 ஆயிரம் டன் ஸ்டீல்

அரை மெகாவாட் முதல் 20 மெகாவாட்வரை இவைகளில் மின்சாரம் உற்பத்தி செய்ய இயலும்.

மாநிலத்திற்கு தேவையான நிலக்கரி, ஸ்டீல் முதலியவைகளை மத்திய அரசிடம் இருந்து மேலும் அதிகம் பெற வேண்டும் என்றும் யோசனை கூறப்பட்டது,

நமக்கு மாதம் 42 ஆயிரம் டன் ஸ்டீல் தேவை. இதில் 30 ஆயிரம் டன் தான் கிடைக்கிறது.

புதிய தொழில்களுக்கு விற்பனைவரி குறைப்பு பற்றியும் யோசனை தெரிவிக்கப்பட்டது.

சுற்றுலாவை ஒரு தொழிலாக ஆக்க வேண்டும் என்று வி. ஜி. சந்தோஷம் கூறினார்.

### அதிசய உலகம்

அவர்கள் அதிசய உலகம் அமைத்து வருகின்றனர். அதில் நிறைய வேலை வாய்ப்பு ஏற்படும் என்றார்கள்.

அந்த இடத்தில் உள்ள நிலப் பிரச்சினை பற்றி கூறினார்.

மின்சாரம் தயாரிப்புக்கு முதலிடம் தரவேண்டும். ஆகவே இதுபற்றி மின் வாரியத்துடன் அவர்கள் பேசி முடித்துக் கொள்ள வேண்டும்.

இவ்வாறு செல்வராஜ் கூறினார்.

அப்போது அமைச்சர் ராசாராம் குறுக்கிட்டு அதிசய உலகம் அமைக்க எனது வாழ்த்துகள் என்றார்.

# துரைமுருகன் நீக்கம் சரியே: உயர்நீதி மன்றம் தீர்ப்பு

சென்னை, அக். 31— தி. மு. க, முன்னாள் எம்.எல்.ஏ. துரைமுருகன் சட்டமன்ற உறுப்பினராக இருந்தபோது சட்டமன்ற உறுப்பினர் என்ற முறையில் சென்னைப் பல்கலைக் கழக செனட் உறுப்பினர் ஆனார்.

அதைதொடர்ந்துபல்கலைகழக சிண்டிகேட் உறுப்பினராக நியமனம் பெற்றார்,

சிண்டிகேட் உறுப்பினர் பொறுப்பிலிருந்து துரைமுருகனை பல்கலைக் கழகம் நீக்கியது.

தன்னை நீக்கியது செல்லாது என்றுஉயர்நீதிமன்றத்தில் துரைமுருகன் "ரிட்" மனுதாக்கல் செய்தார்.

நீதிபதிகள் எஸ். நடராஜன்) பி,என். சிங்காரவேலு அடங்கிய டிவிஷன் பெஞ்ச் அந்த வழக்கை விசாரித்து அவரை நீக்கியது சரிதான் என்று தீர்ப்பு அளித்தது.

# மதுரை மாவட்டத்தில் சத்துணவு மையத்தில் சூரிய அடுப்புகள்

மதுரை, அக்டோபர். 31 மதுரை மாவட்டம் முழுவதும் உள்ள சத்துணவு கூடங்களில் சூரிய அடுப்புகள் பயன்படுத்தப்படும் என்று மதுரை மாவட்ட கூடுதல் ஆட்சித் தலைவர் எஸ், எஸ். சவுக்ரி நிருபர்களிடம் கூறினார்,

தற்பொழுது திருப்பரங்குன்றம் பஞ்சாயத்து யூனியனில் மட்டும் உள்ள சத்துணவு கூடங்களில் சூரிய அடுப்பு பயன்படுத்தப்பட்டு வருகிறது விரைவில் மதுரை மாவட்டம் முழுவதும் சூரிய அடுப்பு பயன்படுத்தப் படவுள்ளது.

இதனால் வேலை சுலபமாகிறது. எரிபொருளும் மிச்சப்படுகிறது.

ஒரு சூரிய அடுப்பின் விலை 2500 ரூபாய் மத்திய அரசு இதற்கு மானியம் அளிக்கிறது.

100குழந்தைகள் சாப்பிடுவதற்கு உரிய சாப்பாடு பொருள்களை இதில் வைத்து சமையல் செய்லாம். இதன் மூலம் 1 கோடி ரூபாய் அளவிலான எரிபொருள் மதுரை மாவட்டத்தில் மிச்சப்படுமென்றும் இந்த சூரிய அடுப்புகள் விரைவில் தமிழகம் முழுவதும் சத்துணவு மையங்களில் பயன்படுத்த திட்டம் உள்ளது என்றும்கூடுதல் ஆட்சித் தலைவர் சவுத்ரி கூறினார்.

# இளம் பெண்ணுக்கு திடீர் வெறி: பத்துபேரை சுட்டு வீழ்த்தினாள்

பிலடெல்பியா அக். 31- இளம் பெண் ஒருத்தி ரோட்டில் போவோர், வருவோர் மீதெல்லாம் திடீரென நடத்திய துப்பாக்கிச் சூட்டில் இருவர் மாண்டனர். 8 பேர் காயமுற்றுள்ளனர்.

இது பற்றிய விவரமாவது!

பிலடெல்பியாவிலுள்ள ஸ்பிரிங்பீல்ட் நகர் பகுதியில் இளம் பெண் ஒருத்தி தன் கையிலிருந்த துப்பாக்கியால் ரோட்டில் போவோர், வருவோர் மீது திடீரென சுடத் தொடங்கினாள்.

இந்தத் தாக்குதலில் [illegible] வயது சிறுவனும் மற்றும் ஒருவரும் இறந்தனர். பலர் காயமடைந்தனர். அந்தப் பெண் இவ்வாறு [illegible] லென்று சுட்டுக்கொண்டே செல்வதைக் கண்டு பீதியடைந்து மக்கள் அங்கும் இங்கும் ஓடினர். இதைக் கண்ட [illegible] பெண் துப்பாக்கியைக் கையில் ஏந்தி வெறிகொண்டவளைப் போல் அலைந்த அந்தப் பெண்ணின் மீது பாய்ந்து அவள் கையிலிருந்த துப்பாக்கியைப் பிடுங்கினாள் பின்னர் அந்தப் பெண் போலீசில் ஒப்படைக்கப்பட்டாள்.

துப்பாக்கி ஏந்திய பெண் மனநோயால் பாதிக்கப்பட்டவளா என்பது குறித்து போலீசார் விசாரித்து வருகின்றனர்.

# தந்தை பெரியாருக்கு கேரளாவில் சிலை: கழக அரசு தீவிரம்

### டாக்டர் நாவலர் பயணம்

சென்னை, அக். 31- தந்தை பெரியாருக்கு கேரளாவில் வைக்கத்தில் சிலை அமைக்க கழக அரசு ஏற்பாடு செய்துவருகிறது.

சாதிவெறியை எதிர்த்து தந்தை பெரியார் அறப்போர் நடத்திய கேரளாவில் உள்ள வைக்கம் என்ற ஊரில் பெரியாரது சிலை வைக்க கழக அரசு ஏற்பாடு செய்து வருகிறது.

சிலை இருக்கும் இடத்தை சுற்றி குழந்தைகள் பூங்கா நூலகம் ஆகியவை அமைக்கவும் அரசு ஏற்பாடுசெய்து வருகிறது.

இதற்கான அடிக்கல் நாட்டுவிழா வைக்கத்தில் நவம்பர் 3-ந் தேதி நடக்கிறது

விழாவில் நிதிஅமைச்சர் டாக்டர் நாவலர் கலந்துகொள்கிறார்

இதற்காக நவம்பர் 2-ந் தேதி இரவு கொச்சி எக்ஸ்பிரஸ் ரயிலில் எர்ணாகுளத்துக்கு நாவலர் புறப்படுகிறார். 3ந் தேதி விழாவில் கலந்து கொண்டுவிட்டு 4ந் தேதி அங்கிருந்து புறப்பட்டு 5ந் தேதி சென்னை வந்து சேருகிறார்.

# தீக்குளித்த தோழர் பொது செயலாளர் பார்த்தார்

சென்னை, அக். 31- முதல்வர் புரட்சித்தலைவர் ராஜினாமாசெய்யக்கூடாது என்று கோரி தீக்குளித்த கழகத் தோழர் ராயபுரம் கணபதியை மருத்துவமனையில் அமைச்சர் நல்லுசாமி சென்று பார்த்து ஆறுதல் கூறினார், அவருடன் ஜெகதீசன் எம்.எல்.ஏ. மற்றும் பலர் சென்றனர்,

பொதுச்செயலாளர் ராகவானந்தம் கணபதியை பார்த்து நலம் விசாரித்தார்.

# தேயிலைக்கு அதிக விலை கிடைக்க முனுஆதி யோசனை

உதகை, அக். 31 —தேயிலை விவசாயிகளிடமிருந்து தேயிலையை இடைத் தரகர் இன்றி அதிக விலை கொடுத்து நேரடியாக கொள்முதல் செய்வதற்கான ஏற்பாடுகள் செய்யப்படும் என்று விவசாய உயர்மட்டக்குழு தலைவர் முனுஆதி தெரிவித்தார்.

தேயிலை விவசாயிகளுக்கும் சிறியதேயிலைதோட்ட அதிபர்களுக்கும் உள்ளபிரச்சினைகளை கண்டறிவதற்காக விவசாய உயர்மட்டக் குழு உதகைக்கு வந்தது.

இக் குழுவின் தலைவர் முனுஆதி தலைமையில் தேயிலை தோட்டங்களுக்கு நேரடியாகச் சென்று அந்த விவசாயிகளிடம் விசாரித்தனர்.

தேயிலை தொழில் கூட்டுறவு சங்கங்களின் பிரச்சினைகள் பற்றியும் நேரடியாக கேட்டறிந்தனர்.

இது குறித்து முனுஆதி நிருபர்களிடம் கூறியதாவது:-

தேயிலை தொழிற் கூட்டுறவு சங்கங்கள் வைத்துள்ள தொழிற்சாலைகளுக்கு பச்சைதேயிலையை இடைத் தரகர்கள் மூலம் தான் வாங்குகிறார்கள்.

இதனால் மிக குறைந்த விலைதான் விவசாயிகளுக்கு கிடைக்கிறது என்று கூறப்பட்டது.

எனவே குழு விவசாயிகளையும்கூட்டுறவுதொழிற்சாலை அதிகாரிகளையும் சிறிய தேயிலை உற்பத்தியாளர்களையும் நேரடியாக விசாரித்து பிரச்சினைகளுக்கு தீர்வுகாண ஆலோசித்தோம்.

மாவட்ட கூட்டுறவுமார்க்கெட்டிங் சங்கத்தின் மூலம் கொள்முதல் செய்ய முடியாத நிலைமை உள்ளதையும் கமிட்டி கேட்டறிந்தது.

தேயிலை உற்பத்தியாளர்களுக்கு இடைத்தரகர் இல்லாமல் நியாயமான விலை கிடைக்க குழு சிபாரிசு செய்யும்

இவ்வாறு முனுஆதி கூறினார்.

# புரட்சித்தலைவர் அஞ்சலி... (முதற் பக்கத் தொடர்ச்சி)

முழுமையிலும் புரட்சித் தலைவா மலர்களைத் தூவினார்

அன்னை இந்திரா காந்தி சுடப்பட்ட இடம் பளிங்குக்கற்களால் பதிக்கப்பட்டு இருக்கிறது அவருடைய ரத்தத்துளிகள் இன்னும் காய்ந்த நிலையில் இருக்கிறது அந்த இடத்தைச்சுற்றி கண்ணாடிக் கூண்டு அமைக்கப்பட்டிருக்கிறது

அந்த இடத்தில் அவர் கண்கலங்கி மவுனமாக நின்று அஞ்சலி செலுத்தினார். அவருடன்தமிழக அமைச்சர்கள் ப. உ. ச, கே. ஏ. கே. எஸ். எஸ். ஆர். ராமசந்திரன் ஆகியோரும சென்றனர்.

அதன் பின்னர் சப்தர் ஜங் சாலையில் உள்ள அன்னை இந்திரா அறக்கட்டளை அலுவலகத்திறகுச் சென்றார் அங்கு நடந்த இரங்கல் வழிபாட்டுக் கூட்டத்தில் புரட்சித் தலைவர் கலந்து கொண்டார்.

இரங்கல் வழிபாட்டுக் கூட்டம் நடந்த இதே இல்லத்தில் தான்முன்ன இந்திராகாந்தி வாழ்ந்தார். ஜனாதிபதி ஜைல் சிங் துணை ஜனாதிபதி ஆர். வெங்கட்ராமன்' பிரதமர் ராஜீவ்காந்தி மத்திய அமைச்சர்கள், மாநில அமைச்சர்கள் ஆகியோரும் இந்தவழிபாட்டுக் கூட்டத்தில் கலந்து கொண்டனர்.

சென்ற ஆண்டு இதே தினத்தில் தான் இன்னும் சொல்லப்போனால் இதே நேரத்தில் தான் காலை 9 15 மணிக்குத் தான அன்னை இந்திரா அமரரானார். அதே 9-15 மணிக்கு அனைவரும் எழுந்து நின்று மவுனமாக அஞ்சலி செலுத்தியபோதுபறவைகளின் ஒலிகளையும் இலைகளின் ஓசையையும் தவிர வேறு எந்த சப்தமும கேட்கவில்லை ஒரே நிசப்தமாக இருந்தது.

எம்.எஸ். சுப்புலட்சுமி உள்ளம் உருக பக்திப் பாடல்கள் பாடினார்.

### மவுன அஞ்சலி

தமிழ். தெலுங்கு. மலையாளம், இந்தி. குஜராத்தி. வங்காளி ஆகியமொழிகளில்அவர் பக்திப்பாடல்கள் பாடினார் குருநானக்கின் பாடல் ஒன்றையும் அவர் பாடினார்.

அவர் பாடிமுடித்ததும் அனைவரும் இரண்டு நிமிட நேரம் மவுன அஞ்சலி செலுத்தினர்

டெல்லி சப்தர்ஜங்சாலையில் உள்ள இல்லத்தின் வெளியே இந்திராகாந்தி சுடப்பட்ட இடத்துக்குச் சென்று ஜனாதிபதி ஜைல் சிங் துணை ஜனாதிபதி ஆர். வெங்கட்ராமன், பிரதமர் ராஜீவ்காந்தி மற்றும் மத்திய அமைச்சர்கள் பிரமுகர்கள் மலர் தூவி அஞ்சலிசெலுத்தினர்.

# மனைவி கொலை: கணவனுக்கு வலை வீச்சு

சென்னை. அக். 31— சென்னை ஷெனாய் நகரில் உள்ள குடிசைமாற்று வாரிய வீட்டில் வசிப்பவர் கந்தசாமி. (வயது 40) இவர் சென்னை துறைமுகத்தில் வேலை பார்த்து வருகிறார் இவரது மனைவி கமலா வயது 34).

மனைவி நடத்தையில் கந்தசாமிக்கு சந்தேகம் இருந்து வந்தது. கடந்த ஒரு வாரகாலமாக தினமும வீட்டில் இருவரும் தகராறு செய்துவந்ததாகத் தெரிகிறது.

நேற்று கந்தசாமி துறைமுகத்தில் இரவு பணிக்கு சென்றுவிட்டு, இன்று அதிகாலை வீட்டிற்கு திரும்பினார்.

வீட்டு வேலை காரணமாக வெளியே சென்றுவிட்டு வீடு திரும்பிய மனைவி மீது சந்தேகம் ஏற்பட்டது.

சமையல் அறையில் இருந்த கத்தியை எடுத்து மனைவியின் கழுத்தை வெட்டினாராம் கந்தசாமி. மனைவி கமலா அந்த இடத்திலேயே பரிதாபமாக மரணமடைந்தாள்.

கந்தசாமி தலைமறைவாகி விட்டார்,

இது குறித்து டி பி சத்திரம் போலீஸ் இன்ஸ்பெக்டர் குட்டேஸ்வரன் வழக்கு பதிவு செய்து விசாரணை நடத்தி வருகிறார்.

# நாட்டின் வளர்ச்சிக்கு பலம் வாய்ந்த மாநில அரசு

## பிரதமர் ராஜீவ் கருத்து

**புதுடெல்லி, அக். 31- மத்தியஅரசு வலிமையாக இருக்கவேண்டும். அதே சமயத்தில் மாநிலங்களும் வலிமைப்படுத்தப்படவேண்டும் என்று பிரதமர் ராஜீவ் காந்தி கூறினார்.**

மத்திய-மாநில உறவுகள் சம்பந்தமான சர்க்காரியா கமிஷன் முன்பாக இந்திரா காங்கிரசின் கருத்துகளை எடுத்துக் கூறுவதற்காக இந்திரா காங்கிரசின் செயற்குழு, இந்திரா காங்கிரஸ் ஆளும் மாநில முதல்வர்கள், இந்திரா காங்கிரஸ் நாடாளுமன்றக் குழு உறுப்பினர்கள், அகில இந்திய இந்திரா காங்கிரஸ் கட்சி நிர்வாகிகள் கூட்டம் பிரதமர் ராஜீவ் காந்தி தலைமையில் நடந்தது.

இக் கூட்டத்தில் மத்திய அமைச்சர்கள் எஸ். பி. சவான், ஏ.பி.ஏ. கனிகான் சவுத்ரி, உ.பி.முதல்வர் வீர் பகதூர்சிங், ஒரிசாமுதல்வர் ஜே.பி பட்நாயக், ராஜஸ்தான் முதல்வர் அரிதேவ் ஜோஷி, அரியானாமுதல்வர் பஜன்லால் முதலியவர்கள் பங்கு கொண்டனர்.

முன்னாள் மத்திய அமைச்சர் பி.சிவசங்கர் தயாரித்து அளித்த ஒரு குறிப்பின் அடிப்படையில் விவாதம் நடந்தது.

பிரான்ஸ், அமெரிக்கா, கனடா போன்ற நாடுகளில் உள்ள சமஷ்டி ஆட்சிமுறை பற்றிய ஒரு குறிப்பும் கூட்டத்தில் கலந்து கொண்டவர்களிடம் தரப்பட்டது.

மத்திய-மாநில உறவுகள் சம்பந்தப்பட்ட அரசியல், நிதி முதலிய அம்சங்களை விரிவாக பரிசீலிக்க பல குழுக்களை அமைக்க கூட்டத்தில் முடிவு செய்யப்பட்டது.

கூட்டத்தில் பிரதமர் ராஜீவ் காந்தி பேசுகையில் மத்திய அரசு வலிமையாக இருக்க வேண்டும். அதே சமயத்தில் மாநிலங்களும் வலிமைப்படுத்தப்பட வேண்டும் என்று கூறினார்.

மத்திய-மாநில உறவுகள் பற்றி அனைத்து பிரச்சினைகளும் இந்திரா காங்கிரஸ் செயற்குழுவும், இந்திரா காங்கிரஸ் மாநில முதல்வர்களும் மீண்டும் கூடும்போது பரிசீலிக்கப்படும்.

### ஜீப் மோதி முதியவர் மரணம்

சென்னை அக். 31— சென்னை திருவான்மியூரை சேர்ந்தவர் சிதம்பரம் வயது 55. இவர் ஒரு சலவைத் தொழிலாளியாம். கடந்த இரு தினங்களுக்கு முன் இவர் பழைய மகாபலிபுரம் அருகே சைக்கிளில் சென்று கொண்டிருந்த போது எதிரே வந்த ஜீப் மோதியதால் தூக்கி எறியப்பட்டு பலத்த காயமுற்றார்.

உடனடியாக சிதம்பரம் சென்னை பொது மருத்துவமனையில் அனுமதிக்கப்பட்டார். அங்கு சிகிச்சை பலனளிக்காததால் சிதம்பரம் இறந்தார். சிதம்பரத்துக்கு இரண்டு மனைவியும் 9 குழந்தைகளும் உள்ளனர்.

### மாணவர் சாவு

சென்னை, அக். 31— செங்கல்பட்டு என்.ஜி.ஓ. நகரை சேர்ந்த சண்முக சுந்தரத்தின் மகன் முருகதாஸ் வயது 21. இவர் ஒரு ஐ.டி.ஐ. மாணவராம். இவர் பெரியார் போக்குவரத்து கழக சார்பில் நடைபெறும் பரீட்சை ஒன்றுக்கு ஆஜராக அனுமதி சீட்டு பெற்றுக்கொண்டு ரயிலில் திரும்பினாராம்.

பரங்கிமலைக்கும்கிண்டிக்குமிடையே ரயில் சென்று கொண்டிருந்த போது முருகதாஸ் கால்தவறி கீழே விழுந்ததால் பலத்த காயமுற்று அதே இடத்திலே இறந்து விட்டார்.

இது தொடர்பாக எழும்பூர் ரயில்நிலையதலைமைக் காவலர் முகமது விசாரித்து வருகிறார்.

# ரூ. 30 கோடி கைத்தறி துணி அமோகவிற்பனை

## அமைச்சர் வி. வி. சுவாமிநாதன் தகவல்

சென்னை. அக். 31— தீபாவளி சீசனுக்கு இது வரை 30 கோடி ரூபாய் மதிப்புள்ள கைத்தறி துணிகள் விற்பனையாகியுள்ளன என்று அமைச்சர் வி. வி. சுவாமிநாதன் தெரிவித்தார்.

கைத்தறி மற்றும் ஆயத்தீர்வைத்துறை அமைச்சர் வி. வி. சுவாமிநாதன் அறிக்கை வருமாறு:

இந்த ஆண்டு கோ-ஆப்டெக்ஸ் விற்பனை நிலையங்களில் தீபாவளி விற்பனை பன்மடங்கு பெருகி இருக்கிறது. கோ-ஆப்டெக்ஸ் கடைகளில் துணி வாங்க 20சதம் முதல் 50சதம்வரை விலை தள்ளுபடி கிடைப்பதோடு ரூபாய் 20 லட்சம் பரிசு பெற வாய்ப்பும் உள்ளது. பரிசு போட்டியில் வெற்றி பெற முந்துங்கள்.

வாடிக்கையாளர்கள் அலை அலையாக கோ-ஆப்டெக்சுக்கு வந்த வண்ணம் இருக்கிறார்கள். தீபாவளி நெருங்குகிறது. இன்னும் 12 நாட்களுக்குத்தான் இந்த சலுகைகள் இந்த ஆண்டு கைத்தறி பாலிஸ்டர் துணி ரகங்களுக்கு அமோகமான ஆதரவு கிடைத்திருக்கிறது.

### வேகமான விற்பனை

அவை வந்தவுடன் விற்பனையாகி விடுகின்றன. கைத்தறி பாலிஸ்டர் ரகங்களை பெற தயாரிப்பாளர்களுக்கு தந்தி கொடுத்த வண்ணம் இருக்கிறோம்.

குறிப்பாக தீபாவளிக்கு வெளியிடப்பட்ட புது ரகங்களான பாலிநாசிக், பாலிஸ்டர் கிரிம்ப் மற்றும் பாலிஸ்டர் ஷபான் சேலைகளுக்கு அதிக கிராக்கி. ரூபாய் 400க்கு மேல் துணிஎடுப்பவர்களுக்கு 20 லட்சம் ரூபாய்க்கு நடத்தப்படும் சிறப்பு போட்டி குலுக்கலில் பரிசு பெற வாய்ப்புண்டு இன்றே கோ-ஆப்டெக்ஸ் கடைக்கு வாருங்கள்.

இன்று வரை சுமார் 30 கோடி ரூபாய் மதிப்புள்ள கைத்தறிதுணிகள்விற்பனையாகியுள்ளன. தீபாவளி விற்பனை இந்த ஆண்டு ரூபாய் 50கோடியை தாண்ட வாடிக்கையாளர்களும், கைத்தறி துணி அபிமானிகளும் ஆதரவு தர வேண்டுகிறேன்.

இவ்வாறு அமைச்சர் வி.வி.சுவாமிநாதன் அந்த அறிக்கையில் கூறியுள்ளார்.

# ஆசிரியர்களுக்கு ஒரேமாதிரி சம்பளம்

## தமிழக அரசு கருத்து

திருவனந்தபுரம், அக். 31-பள்ளிஆசிரியர்களுக்கு ஒரே மாதிரியான சம்பள விகிதம் இருக்க வேண்டும். இதற்கு தேசிய சம்பள கமிஷன் அமைக்கலாம் என்று தமிழக அரசு யோசனை கூறியுள்ளது.

பள்ளி ஆசிரியர்கள் மனுக்கள் பற்றியமாநிலங்களவை கமிட்டிக் கூட்டம் திருவனந்தபுரத்தில் நடந்தது.

தமிழ்நாடு, கேரளம், ஆந்திரம், கர்நாடகம், புதுவை ஆகிய மாநிலங்களில் உள்ள பல்வேறு பள்ளி ஆசிரியர் அமைப்புகளின் மனுக்களை இந்தக் கமிட்டி பதிவு செய்தது.

இந்தக்கமிட்டி தனது சிபாரிசை அடுத்தநிதிநிலை அறிக்கை கூட்டத்தில் தாக்கல் செய்யும்.

பள்ளி ஆசிரியர்கட்குஒரே மாதிரியான சம்பள விகிதம் இருக்க வேண்டும்.

இதற்கு தேசிய சம்பளக் கமிஷன் என்ற ஒரு அமைப்பை உருவாக்கலாம்

பல்கலைக்கழக மானியக் கமிஷன் போலவே பள்ளி மானியக் கமிஷன் என்ற அமைப்பை உருவாக்கலாம் என்று தமிழக அரசு சார்பில் இந்தக் கூட்டத்தில் யோசனை தெரிவிக்கப்பட்டுள்ளது.

### திருப்பதி உண்டியலில் ஒருவரே போட்ட ஒருலட்சம்

திருப்பதி, அக். 31— திருப்பதி கோவில் உண்டியலில் ஒரே பொட்டலமாக கட்டப்பட்ட 1 லட்சத்து 10 ஆயிரம் ரூபாய் மதிப்புள்ள நூறு ரூபாய் கட்டுகள்எடுக்கப்பட்டனயாரோ ஒரு பக்தர் இந்தக் காணிக்கையை செலுத்தியிருக்கிறார்.

உண்டியல் பணம் எண்ணுவதற்காக திறக்கப்பட்ட போது மேற்கண்ட நோட்டுக் கத்தைகள் இருந்தது தெரிய வந்தது.

# ரூ. 8 லட்சம் செலவில் மாணவர் விடுதிகள்: கோவேந்தன் தகவல்

புதுக்கோட்டை, அக். 31- பிற்படுத்தப்பட்டோர் மாணவர் விடுதிக்கு நிரந்தரக்கட்டிடம் கட்டுவதற்காக ஆண்டுதோறும் 8 லட்ச ரூபாய் ஒதுக்கப்பட்டுள்ளது. இந்த ஆண்டு 2 கட்டிடங்கள் கட்டப்படும் என்று அமைச்சர் கோவேந்தன் கூறினார்.

புதுக்கோட்டை மாவட்ட வல்லத்திராக்கோட்டையில் பிற்படுத்தப்பட்டோர் நலத்துறை பள்ளி மாணவர் விடுதியை அமைச்சர் ஆர்.வீ. துவக்கி வைத்தார்.

இவ்விழாவுக்கு தலைமை வகித்த தமிழக பிற்படுத்தப்பட்டோர் நலத்துறை மற்றும் மீன்வளத்துறை அமைச்சர் கோவேந்தன் பேசுகையில் கூறியதாவது:

இந்த ஆண்டு பிற்படுத்தப்பட்டோர் நலத்துறை மூலம் 20 புதிய விடுதிகளை தொடங்கியிருக்கிறோம் ஒரு விடுதி தொடங்கரூபாய் 70,700 செலவாகிறது கடந்த ஆண்டு வரை பிற்படுத்தப்பட்டோர் நலத்துறை மூலம் 523 விடுதிகள் தொடங்கபட்டுசெயல்பட்டு வருகின்றன இவற்றில் 32 ஆயிரத்துக்கு மேற்பட்ட மாணவர்கள் தங்கிப்படித்து வருகின்றனர்

ஆனால் இவற்றில் 49 விடுதிகளுக்குத் தான் சொந்தமான நிரந்தரக்கட்டிடங்கள் உள்ளன மற்ற விடுதிகள் அனைத்துமேவாடகைக் கட்டிடங்களில்தான் இயங்கி வருகின்றன இவற்றிற்கு வாடகையாக மட்டும் ஆண்டு ஒன்றுக்கு சுமார் 25 லட்சம் ரூபாய் செலவாகிறது

எனவே பிற்படுத்தப்பட்டோர் நலத்துறை விடுதிகளுக்கு வேறு அரசு உதவிகளைப் பயன்படுத்தி நிரந்தரக் கட்டிடங்கள் கட்டுவது குறித்து டாக்டர் புரட்சித் தலைவரின் அரசு தீவிரமாக பரிசீலித்து வருகிறது. இந்த ஆண்டு 8 லட்சம் ரூபாய் செலவில் 2 புதிய விடுதிக் கட்டிடங்களைக் கட்ட அரசு அனுமதி அளித்துள்ளது.

தமிழக முதல்வர் டாக்டர் புரட்சித் தலைவர் ஆட்சியில்தான் கிராமங்களை மையமாக வைத்து திட்டங்களை தீட்டி செயல்படுத்தப்பட்டு வருகிறது.

இவ்வாறு அமைச்சர் கோவேந்தன் பேசினார்.

### தீயணைப்பு துறை ஐ. ஜி. மரணம்

மதுரை. அக். 31— தீயணைப்பு துறையைச் சேர்ந்தவர் ஐ ஜி கே சீத்தாராமன் (வயது 49) இவர் பணி காரணமாக மதுரை வந்தார் நேற்று காலை 10 30 மணிக்கு திடீரென மாரடைப்பு ஏற்பட்டது சிகிச்சை பலனளிக்காமல் மரணமடைந்தார் உடல் சென்னை திருவான்மியூரில் உள்ள அவரது வீட்டிற்கு கொண்டு செல்லப்பட்டது.

### தஞ்சையில் சிலை திருட்டு

தஞ்சாவூர், அக் 31— தஞ்சை மாவட்டம் பைங்காத்தூர் அருகே ரங்கநாதபுரம் கிராமத்திலுள்ள ரங்கநாதசுவாமி ஆலயத்தில் 4 பஞ்ச லோக சிலைகள் திருட்டுப்போய் விட்டன.

களவு போன ராஜ கோபாலசுவாமி ரங்கநாதர் மற்றும் 2 உபய நாச்சியார் சிலைகள் அரியவை என கூறப்பட்டது. கோவில் கதவுகளின் பூட்டுகளை உடைத்து திருடர்கள் உள்ளே நுழைந்துள்ளனர். முத்துப்பேட்டை போலீசார் இதுகுறித்து விசாரித்து வருகின்றனர்.

### அதிக வயதான மாணவர் பரிட்சை எழுத நீதிமன்றம் தடை

சென்னை அக். 31— கன்னியாகுமரி மாவட்டம் பூங்கரை கிராமத்தைச் சேர்ந்தவர் கிருஷ்ணலால். இவர் அங்குள்ள ஒரு பாலிடெக்னிக்கில் சேர்ந்தார்.

பாலிடெக்னிக்கில் சேரும் போது 20 வயதிற்கு கீழ் இருக்கவேண்டும் என்று சட்ட விதிமுறை இருக்கிறது. ஆனால் கிருஷ்ணலால் 20 வயதிற்கு மேல் ஆகிவிட்டதால் அவரை பல்கலைக்கழக தேர்வில் பரிட்சை எழுத அனுமதிக்கவில்லை.

இதை எதிர்த்து அவர் உயர் நீதிமன்றத்தில் வழக்கு தொடர்ந்தார். வழக்கை விசாரித்த நீதிபதி சத்தியதேவ். பல்கலைக் கழகம் அவரை பரிட்சை எழுத அனுமதிக்காதது சரியே என்று தீர்ப்பு வழங்கினார்.

# போபால் விஷவாயு: செயலிழந்து தவிக்கும் ஆண்கள் - பெண்கள்

## விஞ்ஞானிகள் கவலை

லக்னோ, அக். 31— போபாலில் ஏற்பட்ட பயங்கர விஷவாயு கசிவினால் பொது மக்களின் எதிர்காலமே பாழடிக்கப்பட்டு விட்டது. ஆண்கள் ஆண்மை இழந்துள்ளனர். பெண்களோ மாதவிடாய் முதலிய கோளாறுகளினால் பாதிக்கப்பட்டுள்ளனர் என்று விஞ்ஞானிகள் கருத்துத் தெரிவித்துள்ளனர்.

கடந்த ஆண்டு டிசம்பர் மாதத்தில் போபாலில் ஏற்பட்ட விஷவாயுக் கசிவினால் சுமார் 2 ஆயிரத்து 500 பேர் உயிரிழந்தனர் சுமார் 10 ஆயிரத்துக்கும் மேற்பட்டவர்கள் பாதிக்கப்பட்டனர்.

விஷவாயுவை சுவாசித்த ஏராளமான ஆண்கள் பெண்கள் குழந்தைகள் ஆகியோர் பயங்கரமாக பாதிக்கப்பட்டனர்

### ஆண்மை இழந்தனர்

நிவாரணப் பணிகள் மேற்கொள்ளப்பட்டுபாதிக்கப்பட்டவர்களுக்கு மருத்துவமனைகளில் சிகிச்சை அளிக்கப்பட்டது. ஆனாலும் அவர்கள் அங்கஹீனம் உள்ளவர்களாகவே இருக்கிறார்கள். பாதிக்கப்பட்ட பெண்கள் திருமணம் செய்து கொண்டாலும் அவர்களுக்கு குழந்தை பிறக்குமா என்பது கேள்விக்குறியாக இருந்து வருகிறது. குழந்தைகள் பிறந்தாலும் அந்த குழந்தைகள் அங்கஹீனம் உள்ள நிலையில் தான் பிறக்கும்.

விஷவாயுவால் பாதிக்கப்பட்ட ஆயிரத்துக்கும் மேற்பட்ட பெண்களையும் ஆண்களையும் விஞ்ஞானிகளும் மருத்துவ நிபுணர்களும் சோதித்துப் பார்த்தனர் அப்போது சில உண்மைகளை அவர்கள் கண்டு பிடித்தனர்.

விஷவாயுவால் பாதிக்கப்பட்டு உயிர்பிழைத்த ஆண்கள் பலர் செயலிழந்தவர்களாகவே காணப்படுகிறார்கள் அவர்கள் ஆண் தன்மையை (ஆண்மையை) இழந்து விட்டார்கள். பெண்களுக்கோ பல கோளாறுகள் ஏற்பட்டு விட்டது. அதில் முக்கிய கோளாறு மாதவிடாய் முறையாக ஏற்படுவதில்லை

இப்படி பல நோய்களால் ஆண்களும் பெண்களும் பாதிக்கப்பட்டுள்ளனர்.

சுமார் 25க்கும் மேற்பட்ட விஞ்ஞானிகளும் மருத்துவ நிபுணர்களும்இந்தஉண்மைகளைக்கண்டு பிடித்துள்ளனர்.

# நோயற்ற வாழ்வுக்கு சைவ உணவே சிறந்தது

புதுடெல்லி, அக். 31— மரக்கறி உணவு உட்கொள்ளுபவர்கள் அதிக அளவில் நோய்வாய்படுவதில்லை. பெரும்பாலும் நோயற்ற நிலையில் சுகத்துடன் நீண்ட நாட்கள் வாழ்கிறார்கள். என்று பிரபல நரம்பியல் நிபுணர் டாக்டர் டி. சி. ஜெயின் தெரிவித்துள்ளார்

அஹிம்சை, சுபாதுகாப்பு உயிரினங்கள் மீது அன்பு செலுத்துவது மற்றும் சத்துணவு ஆகியவை பற்றிய 5 நாள் சர்வதேச மாநாடு புதுடெல்லியில் நடைபெற்றது. விஞ்ஞான பரீட்சாத் சார்பில் நடைபெற்ற இந்த மாநாட்டில் பல்வேறு நாடுகளில் இருந்தும் சுமார் ஆயிரத்துக்கும் மேற்பட்ட பிரதிநிதிகள் கலந்து கொண்டனர்.

மாநாடு முடிந்ததும் பிரபல நரம்பியல் நிபுணரும், மாநாட்டின் பொதுச் செயலாளருமான டாக்டர் டி.சி ஜெயின் நிருபர்களிடம் கூறியதாவது:

மாமிசம் உண்ணாமல் சைவ உணவாக வாழ்க்கை நடத்தும் மக்கள் தான் நீண்ட நாட்கள் வாழ்கிறார்கள். அவர்களை எளிதில் நோய்கள் அண்டுவதில்லை. அப்படியே சில நோய்கள் பாதித்தாலும் அவர்கள் விரைவில் சுகம் பெற்று தேறிவிடுகிறார்கள்

உலகில் பல்வேறு நோய்கள் அசைவ உணவுகள் மூலம்தான் பரவுகின்றன. ஆடு, மாடு, கோழி, பன்றி இப்படி உயிரினங்களை அடித்துச் சாப்பிடும் மக்களை வியாதிகள் சுலபமாக பிடித்துக்கொள்ளுகின்றன. உயிரினங்கள் மூலம் சுமார் 160 வியாதிகள் பரவுகின்றன. அசைவ உணவு மனித உடலில் பல்வேறு கோளாறுகளையும் ஏற்படுத்தி விடுகிறது

மனித வாழ்க்கையில் முக்கிய அங்கம் வகிக்கும் ரத்த அணுக்கள், குறிப்பாக வெள்ளை அணுக்கள் அசைவ உணவால் பெருமளவில் செத்து மடிகின்றன இந்த உண்மையை பல்வேறு நாடுகளில் உள்ள விஞ்ஞானிகள் ஆராய்ச்சி செய்து கண்டு பிடித்துள்ளனர்,

இவ்வாறு டாக்டர் ஜெயின் கூறினார்.

# பணக்காரர்களின் கூட்டுறவுக் கடனை உடனே வசூல் செய்க

## மாநிலங்களுக்கு மத்திய அரசு உத்தரவு

புதுடெல்லி, அக் 31— பணக்காரர்களிடம் இருக்கும் கூட்டுறவு கடனை வசூலிக்க கடுமையான நடவடிக்கை எடுக்கும்படி மத்திய அரசு மாநிலங்களுக்கு உத்தரவிட்டுள்ளது.

டெல்லியில் மாநில கூட்டுறவு அமைச்சர்கள் மாநாடு நடந்தது.

அந்த மாநாட்டை மத்திய அமைச்சர் பூட்டாசிங் துவக்கி வைத்தார்.

அந்த மாநாட்டில் மத்திய அமைச்சர் பூட்டாசிங் கூறியதாவது:

கூட்டுறவு அமைப்புகளுக்கு வரவேண்டிய பாக்கித்தொகை ரூபாய். 1600 கோடியாக ஆகியுள்ளது.

கூட்டுறவுக் கடன்களை திருப்பிச் செலுத்தாதவர்களில் பலர் வேண்டும் என்றே திருப்பிச் செலுத்தாமல் இருக்கிறார்கள்.

அவர்கள் எல்லாம் அநேகமாக பணக்காரர்கள் தான் என்று ஆய்வில் தெரிய வந்திருக்கிறது

இப்படி கூட்டுறவு கடனை திருப்பிச் செலுத்தாமல் இருக்கும் பணக்காரர்களிடம் இருந்து அந்த பாக்கியை வசூலிக்க மாநில அரசுகள் நடவடிக்கை எடுக்க வேண்டும்.

இவ்வாறு பூட்டாசிங் கூறினார்.

இந்தக் கூட்டத்தில் மத்திய விவசாயத்துணை அமைச்சர் யோகேந்திர மக்வானா பேசியதாவது:

உலகிலேயே இந்தியக்கூட்டுறவு இயக்கம் மிகப்பெரிய இயக்கமாக விளங்குகிறது.

இந்தியாவில் 3லட்சம் கூட்டுறவு சங்கங்கள் உள்ளன. இவைகளில் 12.5 கோடி உறுப்பினர்கள் இருக்கின்றனர்.

19 4-85ல் ரூபாய் 3250 கோடி கடன் வழங்கி இருக்கிறது.

இவ்வாறு மக்வானா கூறினார்.

# வன்முறையை நிறுத்த இலங்கை தோட்ட தொழிலாளர் கோரிக்கை

சென்னை, அக். 31— இலங்கையில் வன்முறைச் சம்பவங்களை நிறுத்த வேண்டுமென்று தோட்ட தொழிலாளர் சங்கம் வலியுறுத்தியுள்ளது

இலங்கை தோட்ட தொழிலாளர் சங்கசார்பில் ஒரு அறிக்கை வெளியிடப்பட்டது அந்த அறிக்கையில் இலங்கையிலுள்ள இனப் பிரச்சினைக்கு தீர்வுகாணும் நடவடிக்கையில் விடுதலைப் புலிகளும், இலங்கை அரசும் ஈடுபட வேண்டுமென்று கேட்டுக்கொண்டுள்ளது.

வன்முறையும் எதிர் வன்முறையும் பிரச்சினைகளுக்கு தீர்வாக அமையாது என்றும் அந்த அறிக்கையில் கூறப்பட்டுள்ளது.

### ஆபத்து வரும்

இலங்கையில் மாகாண கவுன்சில்களை அமைக்க விரைவில் நடவடிக்கை எடுக்க வேண்டுமென்றும் ரத்தம் சிந்துவது தடுக்கப்பட வேண்டுமென்றும் அந்த அறிக்கையில் கூறப்பட்டுள்ளது.

இலங்கை தோட்ட தொழிலாளர் அமைப்பின் தலைவர் அய்யாதுரை மேற்கண்ட அறிக்கையை வெளியிட்டுள்ளார், ஏகாதிபத்திய சக்திகளின் பிடியில் இலங்கை சிறிது சிறிதாக விழுந்து கொண்டிருக்கிறது. இது ஆபத்தை விளைவிக்கு மென்றும் தோட்ட தொழிலாளர்கள் எச்சரித்துள்ளனர்.

# அணு ஆயுத தடை: ரஷியா ஒப்புதல்

நியூயார்க், அக். 31— எல்லாவிதமான அணு ஆயுத சோதனைகளையும் நிறுத்த தயார் என்று சோவியத்ரஷ்யா அறிவித்துள்ளது.

ஐக்கிய நாடுகள் சபையில் சோவியத் தூதுக்குழு தலைவர் விளாடிமிர் பெட்ரோவ்ஸ்கி பேசினார். அவர் பேசுகையில் அணு ஆயுதத் தடைக்கு தனது நாடு முழு ஒத்துழைப்பு தர தயாராக இருக்கிறது என்று கூறினார்.

1974 மற்றும் 76-ம் ஆண்டுகளில் சோவியத் ரஷ்யாவுக்கும் அமெரிக்காவிற்கும் இடையே ஏற்பட்ட ஒப்பந்த அடிப்படையில் பரஸ்பரம் ஒத்துழைப்பு நடவடிக்கைக்கு தயார் என்றும் கூறினார்.

இதற்கிடையில் சோவியத் ரஷ்யா அமைத்து வரும் ராடா நிலையம் குறித்து அமெரிக்கா ஆட்சேபம் தெரிவித்துள்ளது. சோவியத் ரஷ்யாவுக்கும். அமெரிக்காவுக்கும் இடையே 1962ல் ஏற்பட்ட ஒப்பந்தத்தை இது மீறுவதாகும் என்றும் அமெரிக்கா குற்றம் சாட்டியுள்ளது.

# ஒரே பிரசவத்தில் 3 பெண் குழந்தை

ஜெய்ப்பூர், அக். 31- ஒரிசா மாநிலத்தில் உள்ள கோரபட் ஊரைச் சேர்ந்த 25 வயது இளம்பெண் ஒரே பிரசவத்தில் 3 பெண் குழந்தைகளைப் பெற்றாள்.

ஏற்கனவே 2 பெண்குழந்தைகளை பெற்றெடுத்தாள் அதில் ஒன்று இறந்துவிட்டது. இப்போது ஜெய்ப்பூர் மருத்துவமனையில் பிரசவத்திற்காக சேர்க்கப்பட்டு 3 பெண்குழந்தைகளைப் பெற்றெடுத்தாள்.

# டெல்லி விமான நிலையத்தில் தீ

புதுடெல்லி, அக். 31— புதுடெல்லியில் சப்தர்ஜங் விமான நிலையத்தின் இரண்டாவது மாடியில் ஏற்பட்ட தீவிபத்தில் 20 லட்சம் ரூபாய் பெறுமானமுள்ள வீடியோ சாதனங்கள் நாசமாகியுள்ளன. தீ விபத்துக்கான காரணம் தெரியவில்லை.

14 தீயணைப்பு எஞ்சின்கள் 90 நிமிட நேரம் போராடி தீயை அணைத்தனர். உயிர்சேதம் எதுவுமில்லை.

# நெல் கொள்முதல்

திருச்சி அக். 31— திருச்சியில் குறுவை சாகுபடியில் இந்த முறை 742 டன் நெல் கொள்முதல் செய்யப்பட்டுள்ளதாக மாவட்ட கலெக்டர் விஸ்வநாதன் தெரிவித்துள்ளார் மேலும் பொது மக்களுக்கு விநியோகிக்கப்படும் அரிசியின் அளவு 6 ஆயிரம் டன்னிலிருந்து 9,500 டன்னாக உயர்ந்துள்ளது என்றும் அவர் தெரிவித்தார்.

# சுலோசனா சம்பத் பம்பாய் பயணம்

சென்னை, அக். 31— தமிழ்நாடு தொழில் வளர்ச்சி நிறுவனத்தின் தலைவர் சுலோசனா சம்பத் பம்பாயில் 3 நாட்கள் சுற்றுப்பயணம் மேற்கொண்டுள்ளார்.

பம்பாயிலுள்ள எஸ்ஸார் கம்பெனியின் நடைமுறை பற்றி கண்டறிந்தார். இந்திய தொழில் வளர்ச்சி வங்கித் தொழில் தலைவருடன் பேச்சுவார்த்தை நடத்தினார்.

நாளை (1-ந் தேதி) பொரோசில் தொழிற்சாலையைசுற்றிப் பார்க்கிறார்.

மறுநாள் ஜே. கே.மில்ஸ் யை பார்வையிடுகிறார்.

# அனுமதியின்றி பலமாடி கட்டுவதை அனுமதிக்க முடியாது

## அமைச்சர் ப. உ. ச. பேச்சு

சென்னை, அக். 31— 2 அடுக்கு மாடி கட்ட அனுமதி பெற்று விட்டு, அதில் பல அடுக்கு மாடிகள் கட்டுவதை அனுமதிக்க முடியாது என்று அமைச்சர் ப. உ, ச. கூறினார்.

வடசென்னை, கொருக்குப்பேட்டை மீனாம்பாள் நகரில் சென்னை மாநகராட்சியால் 3 லட்சத்து 65 ஆயிரம் ரூபாய் செலவில் புதிதாக கட்டப்பட்டுள்ள மகப்பேறு மற்றும்குழந்தைகள் நலமையத்தை அமைச்சர் ப,உ.ச. திறந்துவைத்து சிறப்புரையாற்றினார்.

விழாவில் மாநகராட்சி ஆணையாளர் சாந்தஷீலா நாயர்வரவேற்புரையாற்றினார். மாநகராட்சி சிறப்பு அதிகாரி மாதவ சர்மா தலைமையுரையாற்றினார்.

புதிய மகப்பேறுநிலையத்தை திறந்துவைத்து அமைச்சர் ப. உ. ச. பேசும் போது கூறியதாவது:-

ஏழைமக்களிடம்மறுமலர்ச்சி ஏற்பட வேண்டும் என்பதற்காகத் தான் புரட்சித் தலைவர் பல்வேறு திட்டங்களை தீட்டி செயல்படுத்தி வருகிறார்.

### டெல்லிக்கு கோரிக்கை

இங்கு வருபவர்கள்பெரும் பாலும் ஏழைகள்தான். எனவே இந்த தாய்சேய் நல விடுதியில் பணியாற்றும் செவிலியர்கள், விடுதிக்கு வரும் தாய்மார்களிடம் அன்புடன் நடந்து கொள்ள வேண்டும்.

சென்னை மாநகராட்சி வளர்ச்சி பெற முதல்வர் புரட்சித் தலைவர் தலைமையில் ஒருகுழு அமைத்து பல்வேறு திட்டங்களை செயல்படுத்திவருகிறோம்.

பம்பாய்நகரை சீர்படுத்த மகாராஷ்டிர அரசு மத்திய அரசை மான்யமாக நிதி ஒதுக்க கோரியுள்ளது. அதுபோல் சென்னை மாநகராட்சிக்கும் மானியமாக நிதி ஒதுக்கவேண்டும் என்று மத்திய அரசைகேட்டுக்கொள்கிறேன்.

### நடை பாதை வியாபாரம்

37 லட்ச ரூபாய் செலவில் இதுவரை 50 கி. மீ. தூரத்திற்கு நடைபாதைகள் போடப்பட்டுள்ளது. இன்னும் 100 கி.மீ.தூரத்திற்கு நடைபாதைகள் போடவேண்டும். அதற்கு ஒரு கோடி ரூபாய் செலவாகும்.

இந்த 50 கி.மீ நடைபாதைகள் மார்ச் மாத இறுதிக்குள் போட்டு முடிக்க வேண்டும் என்றுதான் தீர்மானிக்கப்பட்டிருந்தது மாநகராட்சி ஆணையரின் தீவிர முயற்சியின் காரணமாக விரைவிலேயே இவை போட்டு முடிக்கப்பட்டுவிட்டது.

நடைபாதைகளில் சன்சேடுகளோ கூரைகளோ போட்டிருந்தால் பரவாயில்லை. சன்சேடு என்ற பெயரால் கட்டிடங்களை கட்டியிருக்கிறார்கள். நடைபாதைகள்வியாபாரிகளுக்கு வியாபார இடமாக மாறி விட்டது.

### இடிக்கும் அவசியம்

மூன்று மாடி கட்டிடம் கட்ட அனுமதி வாங்குகிறார்கள் ஆனால் ஏழு மாடி கட்டிடம் கட்டுகிறார்கள். இதனால் இடிக்க வேண்டிய நிர்பந்தம் ஏற்படுகிறது.

ரங்கநாதன் தெருவில் உள்ள கடைகளை அப்புறப்படுத்த முடியுமா என்பது கேள்விக்குறியாக இருந்தது. அதனையும் அப்புறப்படுத்திக் காட்டியுள்ளோம்.

### தனி நபர் வருமானம்

இந்தியாவிலேயே குடும்பக் கட்டுப்பாடு திட்டத்தை கழக அரசுதான் தீவிரமாக செயல்படுத்தி வருகிறது.

அதேசமயம், பிற்பட்ட மாநிலம், முற்பட்ட மாநிலம் என்று வகைப்படுத்தி மத்தியஅரசுநிதிஒதுக்கி வருகிறது. தனி நபர் வருமானத்தை வைத்து இதனை செயல்படுத்தி வருகிறது. தனிநபர் வருமானம் குறைவாக உள்ள மாநிலத்திற்கு அதிக நிதியும், தனிநபர் வருமானம் அதிகமுள்ள மாநிலத்திற்கு குறைந்த நிதியும் ஒதுக்கி வருகிறது.

### குடும்ப நலதிட்டம்

குடும்பக்கட்டுப்பாடு திட்டத்தை தமிழக அரசு தீவிரமாக செயல்படுத்தி வருவதால் மக்கள் தொகை குறைந்துள்ளது. தனிநபர் வருமானம் அதிகமாக உள்ளது.

இதன் காரணமாக மூற்பட்ட மாநிலங்கள் பட்டியலில் தமிழகத்தை சேர்த்துள்ளனர் இந்த முறையை மாற்றி அமைக்கவேண்டும்.

இவ்வாறு அமைச்சர் ப. உ. ச. பேசினார்.

என். வி. என் சோமு எம். பி, சட்டமன்ற அறுப்பினர் வேணுகோபால் ஆகியோரும் விழாவில் பேசினர்.

மாநகராட்சி கூடுதல்சுகாதார அலுவலர் எல் சா பென்சமின் நன்றிகூறினார்.

# உயிர்களைபூண்டோடு அழிக்கும் குண்டு: அமெரிக்கா தயாரிப்பு

வாஷிங்டன், அக். 31- உயிர்களை பூண்டோடு அழிக்கும் ரசாயன குண்டுகளை அமெரிக்கா தயாரிக்க முடிவு செய்துள்ளது.

அமெரிக்க அரசு ராணுவத்திற்கு 1986-ம் ஆண்டுக்கு 02பில்லியன்டாலர் (சுமார் லட்சம் கோடி ரூபாய்) ஒதுக்க முடிவு செய்துள்ளதுஇந்த ஒதுக்கீட்டை அமெரிக்க நாடாளுமன்றவை அங்கீகரித்தது.

இதில் விண்வெளிப்போர் (ஸ்டார் வார்) திட்டமும் அடங்கும். அதற்காக உயிரினங்களை பூண்டோடு அழிக்கும் ரசாயன ஆயுதங்களை அமெரிக்கா தயாரிக்க முடிவு செய்துள்ளது

1969க்குப் பிறகு இப்படிப்பட்ட ஆயுதம் தயாரிப்பதில்லை என்று அமெரிக்கா முடிவு எடுத்திருந்தது. இப்போது 6 ஆண்டுகளுக்குப்பின் அந்த முடிவை மாற்றிக் கொண்டு ரசாயன சர்வ நாச ஆயுதங்களைத் தயாரிக்க அமெரிக்கா முடிவு எடுத்துள்ளது குறிப்பிடத்தக்கது. இந்த ஆயுதங்களைத் தயாரிக்க ரூபாய்192கோடி ஒதுக்கீடு செய்ய முடிவு எடுத்துள்ளது இதற்கு நாடாளுமன்ற நிதி ஒதுக்கீட்டுக் குழு அனுமதியை அமெரிக்க அரசு எதிர்பார்க்கிறது

(ரசாயன குண்டு என்பது பயங்கர வெடிமருந்துடன் உயிரினங்களை அறவே அழிக்கும் ரசாயன விஷங்களை சேர்த்ததாகும்.

விண் வெளிப் போர்த் திட்டத்தின் ஆராய்ச்சிக்காக 2.75 பில்லியன் டாலர் ஒதுக்க நாடாளு மன்றம் அனுமதித்தது. ஆனால் அமெரிக்க பாதுகாப்பு இலாகா கேட்ட தொகை 3.7 பில்லியன் டாலர் ஆகும். (ஒரு பில்லியன் என்பது 100 கோடி.)

# கள்ளக்காதலில் ஈடுபட்ட முஸ்லிம் பெண்ணுக்கு சவுக்கடி

திருவனந்தபுரம், அக். 31— திருவனந்தபுரம் மாவட்டத்தில் 26 வயது இளம் பெண்ணுக்கு ஜமாத் (முஸ்லீம் அமைப்பு) மொட்டை அடித்து, சவுக்கடி கொடுத்து தண்டனை வழங்கியுள்ளது.

இதுபற்றிய விபரமாவது, திருவனந்தபுரம் மாவட்டத்தைச் சேர்ந்த பெருமதுராவில் முஸ்லிம் பெண் ஒருவர் கள்ளக் காதலில் ஈடுபட்டதாக அவளது முன்னாள் கணவனும் சிலரும் ஜமாத்தில் புகார் செய்தனர். அந்தப் பெண் ஏற்கனவே விவாகரத்து பெற்றவரென்று கூறப்படுகிறது.

இதைத் தொடர்ந்தே அந்தப் பெண் மொட்டையடிக்கப்பட்டு சவுக்கடி தண்டனையும் வழங்கப்பட்டுள்ளது. சில மாதங்களுக்கு முன்பு திருவனந்தபுரம் அருகேயுள்ள பீமபள்ளி பகுதியில் கள்ளக்காதலில் ஈடுபட்ட முஸ்லிம் பெண் ஒருவருக்கு இதுபோல் தண்டனை வழங்க ஜமாத் முற்பட்டபோது பொது மக்கள் எதிர்த்ததை தொடர்ந்து தண்டனை நிறுத்தப்பட்டதாக தெரிகிறது.

இந்த சம்பவம் தொடர்பாக பாதிக்கப்பட்ட பெண் கொடுத்த புகாரை அடுத்து ஜமாத்தலைவர் உள்ளிட்ட எட்டு பேரை போலீசார் கைது செய்துள்ளனர். இவர்களில் ஒரு பெண்ணும் உள்ளார். விவாகரத்து செய்தபோதும் தனது முன்னாள் கணவன் அடிக்கடி தன் வீட்டிற்கு வந்து தன்னை துன்புறுத்தியதாகவும் அந்தப் பெண் தனது புகாரில் கூறியுள்ளார்,









Edited and Published by K RAVINDRAN on behalf of Thangamani Publications and Printed by All India Anna D M K Perarignar Anna Trust Press at 34, Nelson Manickam Road, MADRAS-600029.